உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தகுருப்யோநமஃ

# சித்தாந்தவுந்தியார்.

(நான்காம்பதிப்பு)

இஃது

"வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்"

ஸ்ரீ ல ஸ்ரீ

சோமசுந்தர நாயகரவர்களால்

இயற்றப்பட்டது.

MADRAS:

PRINTED AT THE "MERCANTILE PRESS"

1897

இதன்விலை அணா-௧.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# சித்தாந்தவுந்தியார்.



### விநாயகக்கடவுள்.

கலலாளிழன்மலைவில்லாரருளிய
பொலலாரிணைமலருந்தீபற
போற்றித்துதிப்பாமென்றுந்தீபற. [1]

### சுப்பிரமணியக்கடவுள்

கந்தன்திருத்தணிகாசலமேவிய
சங்கரன்பாலடைந்துந்தீபற
சம்பெறுவாழுவந்துந்தீபற. [2]

### நடராஜவள்ளல்.

அம்பலத்தாடுமழகனடிமலர்
கும்பிட்டுப்போற்றுமென்றுந்தீபற
குறைக்கடந்தாமென்றுந்தீபற. [3]

### சிவகாமியம்மையார்.

தேவியுமையுலகீன்றபிராட்டிநம்
ஆவியெனும்படியுந்தீபற
அகலாளருள்வியந்துந்தீபற. [4]

### ஆளுடையபிள்ளையார்.

ஞானசம்பந்தனடிமலர்ப்பத்தியஞ்
ஞானமகற்றுமென்றுந்தீபற
நம்பெருவாழ்வாமென்றுந்தீபற. [5]

### ஆளுடையவரசுகள்.

நாவரசெம்மைநயந்தருளாரிய
ராவனென்றேமகிழ்ந்துந்தீபற
அவரடிக்கன்புசெய்துந்தீபற. [6]

### ஆளுடையநம்பிகள்.

வன்றொண்டர்பாதம்வழுத்துமடியர்தம்
பின்றொண்டுசெய்வாமென்றுந்தீபற
பெற்றம்பெருமையென்றுந்தீபற. [7]

**ஆளுடையவடிகள்.**

மாணிக்கவாசகனார்மலர்ப்பாதம்
மாணிப்பொன்னாகுமென்றுந்தீபற
அருள்வழிகாட்டுமென்றுந்தீபற. [8]

**அறுபத்துமூன்றுநாயன்மார்.**

அறுபத்துமூவரடிமலர்வாழ்த்திடிற்
பெறுமுத்திவேறிலையுந்தீபற
பேறதுவாகுமென்றுந்தீபற. [9]

**மெய்கண்டசிவம்.**

மெய்கண்டாள்சந்ததிமேவினர்க்கேயிவ
ணுய்வுண்டாமென்றுணர்ந்துந்தீபற
உண்மைநிலயமென்றுந்தீபற. [10]

**அருணந்திசிவம்.**

அருணந்தியார்பதமன்புசெய்தேத்திடில்
இருணந்திமாயுமென்றுந்தீபற
எங்குருநாதனென்றுந்தீபற. [11]

**மறைஞானசம்பந்தசிவம்.**

மறைஞானசம்பந்தர்மாணருள்வாழ்த்திடின்
இறைஞானமெய்துமென்றுந்தீபற
எல்லாவுயிர்க்குமென்றுந்தீபற. [12]

**உமாபதிசிவம்.**

போற்றுமுமாபதிப்புங்கவர்போதமிங்
கேற்றுஞ்சிவனிடத்துந்தீபற
எல்லாவுயிரையுமுந்தீபற. [13]

**ஸ்ரீகண்டசிவம்.**

சீகண்டதேசிகன்சேவடிக்கன்புசெய்
தேகண்டவாழ்விதென்றுந்தீபற
என்றும்பிறவாமையுந்தீபற. [14]

**நூலின்பெயரைவிளக்குதல்.**

சித்தாந்தஞானந்தெளியவுணர்த்தலாற்
சித்தாந்தவுந்தியென்றுந்தீபற
செப்புமிந்நூற்பெயருந்தீபற. [15]

பிறமதங்கள்சித்தாந்தமாகாவெனல்.

எல்லாமதங்களும்பூருவமாகையால்
சொல்லார்சித்தாந்தமென்றுந்தீபற
சொற்பொருடேர்ந்தாரென்றுந்தீபற. [16]

பதிபசுபாசம்அநாதியெனல்.

பாசம்பசுபதியாகுமிம்மூன்றுநாம்
பேசிலநாதியென்றுந்தீபற
பெரியோர்சொல்வார்பயனுந்தீபற. [17]

சித்தாந்தநூல்களிவையெனல்.

உந்திசங்கற்பமூர்போதமாதிகள்
சிந்தித்துணர்வாமென்றுந்தீபற
சித்தாந்தநூல்களென்றுந்தீபற. [18]

பதிஞானநூல்களிவையன்றிவேறுதுர்க்
கதிஞானநூல்களென்றுந்தீபற
கட்டறவிட்டோமென்றுந்தீபற. [19]

காழிப்பிள்ளையார்வாழ்த்து.

காழியில்வந்தருள்கண்மணியாருநம்
வாழ்வருள்பெற்றுமென்றுந்தீபற
வரவுபோக்கற்றுமென்றுந்தீபற. [20]

உலகாயதமதவிழ்வு.

நாத்திகம்பேசிகலிந்துழன்மூடனைப்
பார்த்தலுந்தோடமென்றுந்தீபற
பழக்கங்கொடியதென்றுந்தீபற. [21]

தேகஞ்சடமதிற்சேர்குணமுஞ்சட
மாகுமதாலுயிருந்தீபற
அக்குணமாகாதென்றுந்தீபற. [22]

சித்துயிராருந்தெளிவுடையார்க்கது
சத்தாமொருமுதலுந்தீபற
தலைவனுமாகாதென்றுந்தீபற. [23]

தலைவனிவற்றில்வேறாகியிரண்டையும்
அலைவறச்செய்வானென்றுந்தீபற
அவ்வப்பரிசறிந்துந்தீபற. [24]

பூதஞ்சடமாதலாலதன்காரிய
பேதங்கடோன்றுவென்றுந்தீபற
பெரியோன்சிவனன்றியுந்தீபற. [25]

செய்பவரின்றியோர்செய்வினையின்றெனுந்
தெய்வவுரைதெளிந்துந்தீபற
சிவனருள்சேர்துமென்றுந்தீபற. [26]

நாத்திகப்புல்லருண்ணுணிநலம்பெற
மாத்திரையொன்றினுளுந்தீபற
வகுத்தனம்போதமென்றுந்தீபற. [27]

காழிப்பிள்ளையார் வாழ்த்து.

சைவசிகாமணிசம்பந்ததேசிக
னுய்வழிகாட்டினனுந்தீபற
ஒப்பில்கருணையென்றுந்தீபற. [28]

வேதாந்தசித்தாந்தசமரசம்.

வேதாந்தஞானவிழுப்பொருள்கற்றவர்
நாதாந்தங்கண்டாரொன்றுந்தீபற
நம்மையாட்கொண்டாரொன்றுந்தீபற. [29]

சித்தாந்தஞானஞ்சிவோகம்பாவிக்கவே
சித்தாந்தஞ்செய்யுமென்றுந்தீபற
சிவமேநாமாமென்றுந்தீபற. [30]

வேதாந்தசித்தாந்தவேற்றுமைகாண்பவர்
பேதாந்தப்பேயரொன்றுந்தீபற
பெரியோர்துணிபிதென்றுந்தீபற. [31]

வேதாந்தப்போலிகளைவெறுத்தல்.

எல்லாஞ்சிவமென்றியம்பும்வேதத்துண்மை
கல்லார்கயவரொன்றுந்தீபற
கற்பர்வேறாகவென்றுந்தீபற. [32]

காரணம்பொன்னதிற்காரியம்பூடணம்
ஆரணங்கூறுமென்றுந்தீபற
அறபூதியாகுமென்றுந்தீபற. [33]

காரணமூவகைபொன்முதற்காரணம்
பூரணன்சொல்வகையுந்தீபற
புகல்வாமிரண்டுவேறுந்தீபற. [34]

கம்மியனோடுகருவிநிமித்தமுஞ்
செம்மைத்துணையுமென்றுந்தீபற
சேரும்பரிசிதென்றுந்தீபற. [35]

இம்முறையன்றியியம்புவர்பித்தர்வே
றம்முறைகளாமென்றுந்தீபற
ஆபாசஞானமென்றுந்தீபற. [36]

மாயைமுதற்பரன்மாணுநிமித்தமிங்
காயுந்துணைசத்தியுந்தீபற
ஆகுமுலகமென்றுந்தீபற. [37]

கம்மியனோடுகருவிபொன்மூன்றுமொன்
றெம்முறைகொள்வதென்றுந்தீபற
எம்மதமேற்குமீதுந்தீபற. [38]

கம்மியனாகான்கருவியும்பொன்னுமற்
றிம்முறையாகாவென்றுந்தீபற
இரண்டுமொருமுதலுந்தீபற. [39]

கம்மியன்பாற்பொன்னிலன்றியோர்பூடணம்
செம்மைகொளாமைதேர்ந்துந்தீபற
சிவன்செயல்போற்றுவாமுந்தீபற. [40]

சிவனுயர்சித்திவன்றன்னிலுலகசித்
தெவனுதியாநிற்குமுந்தீபற
எற்குமாமாயையிலுந்தீபற. [41]

சிவனுயிராகானிவன்சிவனாகான்மற்
றிவராவதெப்படியுந்தீபற
இல்லாவுலகமென்றுந்தீபற. [42]

உலகமில்லாதநிலைமைவிகாரத்தா
னிலவுமதியசமுந்தீபற
நீகண்டுணர்தியென்றுந்தீபற. [43]

இல்லாவுலகமில்லாமைகொண்டெய்துமென்
றுல்லாசம்பேசுவருந்தீபற
ஊகமிழந்தாரென்றுந்தீபற. [44]

இல்லாவொருபொருளுண்டெனவேதமென்
சொல்லாகிற்குமறியுந்தீபற
சோம்பேறிஞானமென்றுந்தீபற. [45]

சத்திலசத்துமசத்தினிற்சத்துமிங்
கெத்திறந்தோன்றுமென்றுந்தீபற
இயம்புவதேலாதென்றுந்தீபற. [46]

சத்திலசத்தாசெய்வாரகம்பிர
மத்தருண்டத்தமென்றுந்தீபற
வஞ்சகப்பித்தமென்றுந்தீபற. [47]

ஓதுமசத்தியுயர்சத்துடிக்குமென்
றோதுவர்நாத்திகருந்தீபற
ஒன்றுமறியாரென்றுந்தீபற. [48]

ஏகமென்பார்சிலரத்துவிதப்பொருள்
மூகராற்றாருளருந்தீபற
முற்றும்விரோதமென்றுந்தீபற. [49]

ஒன்றற்றிரண்டற்றுபயமுமற்றதற்
றொன்றுதல்கூர்ந்துணருந்தீபற
ஐயத்துவிதமென்றுந்தீபற. [50]

காழிப்பிள்ளையார்வாழ்த்து.

பாலுக்கரன்வடிவந்தருதேசிகன்
காலுக்கபயமென்றுந்தீபற
கலிநசைதீர்ந்தோமென்றுந்தீபற. [51]

விஷ்ணுபாரம்யபங்கம்.

நாரணனுதிபசுக்களைமேய்ப்பவன்
காரணனுருமென்றுந்தீபற
கருதற்கினியானென்றுந்தீபற. [52]

வேதத்திலப்பசுக்கூட்டத்தையாள்பதி
மாதுக்குகந்தானென்றுந்தீபற
வந்தித்துரைக்குமென்றுந்தீபற. [53]

# சித்தாந்தவுந்தியார்.

பாசத்தின்மூழ்கும்பசுக்களைத்தெய்வமென்
றேசெத்தொழிபவருந்தீபற
எப்படியுய்வரொன்றுந்தீபற. [54]

பிருந்தைபிறந்தமயலெய்திரோதனம்
புரிந்தவன்றேவென்பதுந்தீபற
பொருந்துவதெப்படியுந்தீபற. [55]

சிங்கவுரிமையுமாலயனென்னையு
மங்கைபங்காளனென்றுந்தீபற
வாங்கித்தரித்தானென்றுந்தீபற. [56]

கரியவன்செந்நீர்கபாலத்திற்கொண்டுநம்
பெரியவன்றேன்றுதீயுந்தீபற
பேசித்துதிப்பாமென்றுந்தீபற. [57]

பொய்த்தேவுபேசிப்புலம்புமவலர்தம்
பற்றேதும்வேண்டாமென்றுந்தீபற
பற்றிடிற்பாவமென்றுந்தீபற. [58]

மாயவன்றேவெனின்மாதேவன்பக்கல்சார்ந்
தாயதன்கண்ணிடந்துந்தீபற
அர்ச்சித்ததென்கொலென்றுந்தீபற. [59]

கண்ணிடந்தர்ச்சித்தகாரணத்தாலவன்
கண்ணனெனும்பெயருந்தீபற
கண்டனருகுமென்றுந்தீபற. [60]

அன்பிற்சிறக்குமவனுக்கரனன்று
தன்பக்கலாழிதந்துந்தீபற
தானருள்செய்தானென்றுந்தீபற. [61]

மாலயனுதிபசுக்கள்கடவுளர்
போலிருப்பாரவருந்தீபற
போற்றும்பதியாகாருந்தீபற. [62]

### காழிப்பிள்ளையார்வாழ்த்து.

இன்பந்தரவல்லவீசன்திருஞான
சம்பந்தநாதனென்றுந்தீபற
தன்னிகரில்லானென்றுந்தீபற. [63]

### பாஷ்யவிவரணம்.

வியாகனுரைத்தமிகுசூத்திரப்பொருள்
பேதம்படப்பலருந்தீபற
பேசினர்வேறுவேறுந்தீபற. [64]

சங்கரபாகந்ததீர்த்தருடையவர்
தங்களுரைநமக்குந்தீபற
சழக்குரையாகுமென்றுந்தீபற. [65]

சீகண்டதேசிகர்நன்கருள்செய்யுரை
யேகனொடுணர்வாமென்றுந்தீபற
எத்துமாபாடியமுந்தீபற. [66]

### பஸ்மருத்ராக்ஷவைபவம்.

நீறுபுனைந்துநிமலனடிக்கன்பு
மீறுமவர்தமக்குந்தீபற
மேல்வீடுவந்ததென்றுந்தீபற. [67]

பூதியிலாமதிகேடர்முகாலோப
ஞதிகளாகாவென்றுந்தீபற
அஞ்சுவர்மேலோரென்றுந்தீபற. [68]

கண்டிகைபூண்டுகேவின்செயுமன்பர்க்குத்
தொண்டுசெய்வாமுவந்துந்தீபற
சுருதிக்கிசையவென்றுந்தீபற. [69]

வேதத்திற்கண்டிகைபூதியல்லாலவ்வேறு
போதிப்பதில்லையென்றுந்தீபற
போற்றுவர்மேலோரென்றுந்தீபற. [70]

ஞானாங்கமாவதுபூதியென்றேமறை
காணுங்குணர்த்துமென்றுந்தீபற
சம்பந்தர்தந்ததென்றுந்தீபற. [71]

### காழிப்பிள்ளையார்வாழ்த்து.

எம்பந்தநீங்கவெழுந்தருள்காரணர்
சம்பந்தநாதரென்றுந்தீபற
சமயத்தலைவரென்றுந்தீபற. [72]

## போலிவைதிகர்போய்யொழுக்கம்.

வேதியரென்னும்பெயர்மாத்திரம்பெற்று
நீதிமுறைகப்பியுந்தீபற
நீறிடுவார்சிலருந்தீபற. [73]

உலக்கையிற்பூணென்றேளிருமலர்கரத்
திலக்கமில்ரேகைகளுந்தீபற
இடந்தெரியாமனீறுந்தீபற. [74]

ஆகமத்தன்றியணியும்விதிநீறு
யோகிகள்காணொன்றுந்தீபற
யூகித்தறிவாமென்றுந்தீபற. [75]

அங்குலங்கண்டணியும்விதியாகமம்
அங்கப்படியுரைத்ததுந்தீபற
அருளுமறிவாமென்றுந்தீபற. [76]

ஆகமங்கைவிட்டபாதகர்வேதத்தைப்
போகவிட்டார்மறந்துந்தீபற
பொய்வேடக்காரரொன்றுந்தீபற. [77]

வேதப்பசுவதன்பாலுயர்ராகம
மாதலறிந்திலருந்தீபற
அஞ்ஞானபந்தரொன்றுந்தீபற. [78]

ஆகமம்வேண்டாதபாவிகள்கோயிலிற்
போகலொட்டோமினியுந்தீபற
புகல்வாம்விதியெடுத்துந்தீபற. [79]

வேதியனாவான்விபூதியைப்போற்றானேல்
சாதிப்பறையனென்றுந்தீபற
சாதித்துரைப்பாமென்றுந்தீபற. [80]

## காழிப்பிள்ளையார்வாழ்த்து.

ஆச்சாபுரத்திலங்கமுயிர்க்கன்று
பேச்சோடுளந்தவிருந்தீபற
பேரின்பம்வாய்த்ததென்றுந்தீபற. [81]

## மண்பூசுவாரிழிவு.

மண்குழைத்திட்டார்மறைபிழந்திட்டாரெ
பிறன்குணத்தாமெமக்குந்தீபற
எண்குணம்வாய்க்குமென்றுந்தீபற. [92]

குடுண்டதேகந்தொடிற்படிந்தேகங்கை
ஆடுவர்மேலோரொன்றுந்தீபற
அப்பவநீங்கவென்றுந்தீபற [93]

கௌதமரிட்டபெருஞ்சாபத்தினவலி
கௌடதமிலலேயென்றுந்தீபற
அழிவரந்தோபவத்தூந்தீபற. [94]

## தூநுதலினோர்வாழ்த்து

கற்பிதம்பா[redacted]ல்காலாலுனை
[redacted]புதனோ[redacted]ந்தீபற
ஆவனென்[redacted]கிழ்ந்துந்தீபற.

ஒருமொழி[redacted]ன்னவுளவறிவார்தம்
இருமையுமா[redacted]மென்றுந்தீபற
பனறுமபெரியனொன்றுந்தீபற. [96]

திருவிசைப்பா[redacted]சத்தார்முதனம்மவை
தரும்அருள்[redacted]மென்றுந்தீபற
தன்னியரானே[redacted]ன்றுந்தீபற. [97]

கண்ணன்முடிமிசைக்கால்வைத்தசேசிர
ரொன்னுமெந்தெய்வமென்றுந்தீபற
இன்னருள்செய்தானென்றுந்தீபற. [98]

தொண்டர்புராணந்துகளறச்செய்தவர்
தொண்டர்தந்தொண்டுசெய்துந்தீபற
தொல்வினைதீர்ப்பாமென்றுந்தீபற. [99]

ஆரியர்நால்வர்பதமலர்வாழிநல்
லாரியம்வாழியென்றுந்தீபற
அருந்தமிழ்வாழியென்றுந்தீபற.

---

ஸ்ரீசம்பந்ததீர்த்தசரணரவிந்தார்ப்பணமஸ்து.

திருச்சிற்றம்பலம்.